தப்பியொரு வேடன் றராபதிதாள் சென்றிறைஞ்சிச்
செப்பினனஞ் சேனையெல் லாஞ்சிதைத்த - தொப்பிலா
வெய்ய வராகமொன் றுமேவியவட் டேரினைநீ
யைய திரித்தருள்க வென்று. (௨௯)

சொற்ற வுரைசெவியிற் றோய்தலுமே மன்னவர்கோன்
செற்றமனத் தோடிகச் சிரித்தநின் றீண் - டுற்றவர்தம்
மாவியின்கண் வைத்தநம் மாவியெனக் கையெடுத்துத்
தேவிதரு செம்பொற் சிலை. (௩0)

தங்கச் சயந்தனத்தைச் சாரதிவல் லூரப்போய்த்
துங்கக் கரிபரியைத் தூளாக்கி - யங்கெதிர்ந்தே
சார்தருவெங் கேழற் றடநுதன்மே லுய்த்திட்டான்
கூர்தருகோ லொன்று குறித்து. (௩௧)

உய்த்தகணை யோசனையோர் பத்துக்கப் பாற்கொடுபோய்
வைத்திடலும் பைங்கழைநீள் வான்கிரிமே - லெய்த்தவுட
னொன்றுதிரஞ் சோர வெருண்டிருட்டிக் கௌசிகன்பாற்
றன்றவழுந் தங்கோடிற் று. (௩௨)

சிதறுண்டு போய படைஞரெலாஞ் சேர்ந்து
பதமத்தாள் வந்து பரவ - வதிபன்று
மஞ்சாதி ரென்றுவங் கையமைத்துத் தேர்நடத்திச்
செஞ்சோரி வார்களத்தட் சென்று. (௩௩)

சேனையவட் பட்ட புதுமை தெரிசித்தே
யேனமதைக் கொல்லவுளத் தெண்ணியது - போனதிசை
காற்சுவடு பற்றிப்போய்க் கானம் பலபுகுந்து
மேற்செறிய தூளி மிக. (௩௪)

போர்தனைத்தான் சைவலமும் பொற்பிரச முண்டகமுங்
கார்நிமிரு காவியொடு ஞாளிகமு - மார்துமிறாஞ்
செய்ய குமுதமுந்தோ டாமலரால் சக்குறவாற்
றுய்யனிகர் தெண்ணீர்த் தடம். (௩௫)

மண்டலத்திற் பாயிருளை வாரியுண்டு செங்கரத்தால்
விண்டலத்தின் மேவருக்கன் வேந்தர்பிரா - னண்டமாதஞ்
சென்றெழுந்து தன்மெய் செறிந்ததுகண் மன்னவுற்றான்
றன்றுகுட முந்நீர் துனைந்து. (கசு)

பின்றொடர்ந்த மந்திரிமார் பின்னிடையாத் தானைமன்னர்
வென்றியரிச் சந்திரனு மேவூர்தி - நின்றிழிந்து
பொய்கைநறு நீர்குடைந்தண் டாறிப்பூ ரித்திருந்தார்
மைதுலவு பூம்பொதும்பர் வாய். (கஎ)

சீதவனங் கொண்மார் சிலமுனிவ ராங்கணைந்தார்
காதயில்வேற் றானையொடு காவலற்பார்த் - தோதினரீண்
டாதவெவன் போந்தா யடலைசெயுஞ் சாபத்தாற்
காதிமகன் கண்டக்கா லென்று. (கஅ)

என்னவ் வடிகட்குச் சிற்றமடி யேனிடத்துக்
கொன்னுமவர்க் கியான்குயின்ற குற்றமற்றுண் - டென்னி
னவைதிருத்திப் பின்ன ரகல்கைகட னென்றுக்
குவிகரத்தோ டாங்குரைத்தான் கோன். (ககூ)

மன்னிசைத்த மாற்றமது மாதவத்தோர் கேட்டனர்கள்
பின்னிகழ்வ காண்டியெனப் பேசினர்கண் - மன்னகன்றார்
பின்பிரவு துன்னப் பிரியையொடு கூடாரத்
தன்பினுற்றுக் கண்வளர்ந்தா னவ். (உ௰)

தாதவிழ்தார்ப் பார்த்திவர்கள் சார்ந்தறுவை யிற்றுயின்றார்
பாதவத்தின் மேத்துயின்ற பாய்பரிதேர் - லாதவன்பூங்
காவிற் றொழுகியெழக் கங்குலறத் தோன்றினனீன்
பூவி மனாமலர வந்து. (உக)

சேனையொடு தோரசர் யாருமுணர்ந்தெழுந்தார்
வாளமணி வாய்ச்கலவி வள்ளலெழுந் - நாறலவு
மீனவிழி மெல்லியலாள் வேந்தனச்ச மோர்ந்திறைவ
னானதிற னிற்கெவன்னென் றான். (உஉ)

வானமிழ்த நாணுமொழி மானே நெருநலிரா
வூனமுறு மோர்கனவு கண்டுணர்ந்தேன் - யானென்
றிறையளித்தது நாதனாவேந் தேயினனு லோவை
யிறையினிவட் டந்திடுதி ரென்று. (௪௩)

இமைப்பினிலந் தூதுவர்தா மேகி யழைப்ப
வமைச்சரொ டொல்லை யணுகி - யெமைமாக டீன்ற
ளடப வழுசதபரி சென்னருக வென்றரயன்
செய்யகழல் போற்றிநின்றார் சேர்ந்து. (௪௪)

அந்தநிலை மற்றவர்ப்பார்த் தன்னை லெனை படந்த
தந்தைதனு வோவென்னை சார்ந்தவனின் - றந்துலை
தாரைகைலோ கதநே தவிர்ந்தபின்று னைந்து ம -
வாளாமுயங் காவிருந்தே ருல். (௪௫)

யானே யருந்தவத்தோற் கீந்தனனோர் பேரதையைப் போய்த்
தானே யொருத்தியவற் சார்ந்தனனு - டானறமேரார்
மாதகன்றான் கனணிறந்தானை மற்றொருத்தி நின்றனளோர்
கோதை யுறுதி கொய்தது. (௪௬)

இன்னணமையா னென்ன விராக்கனவி னென்சலட
சொன்ன வினிவிலை யுமோவறியேன் - கொன்னுமிந்தச்
சொப்பனத்தாற் சார்திறனைச் சூழ்ந்துளது நீயிரெலா
மிப்பொழுதிங் கேயுரைச்கென் றான். (௪௭)

ஐவகையங் கத்துடனே யாள்வினைவன் கண்குடிகாப்
பையமறக் கற்றறித லாங்குலடையோன் - றுய்யமனச்
சத்தியகீர்த் திப்பெயரோன் றன்பிறது பௌத்திரனைக்
கைத்தலங்கூப் பித்தொழுது கண்டு. (௪௮)

இந்த வினையெல்லா மெழுந்தவிறற் கௌசிக
னந்தமுனி யாவனையு மேலாக்க - மந்திரிநு
நாடு நகரிழந்து நங்கைமகன் வேல்வேறு
மாடவனைப் பின்வேறும் யாம். (௪௯)

என்றனைய மன்னு மெனைமகளை யிந்நாட்டை
வென்றியிபுந் தாலும் விதித்தமுறை - யொன்று
மிழவற்க வென்று விசைத்தா ளிறைவன்
கழலரிவை தாழ்ந்து கசிந்து. (௫௦)

கேட்டமைச்ச ரெல்லோருங் கேழ்கிளர்கண் ணீரருவி
காட்டக் கலுழ்ந்தனர்கள் கனவொழிமின் - வாட்டுதய
னென்றவனைத் தேற்றியினி தேர்தலிருந் தானப்பாற்
றன்றியவை சொல்வாந் தொகுத்து. (௫௧)

வேட்டஞ்செய்காண்டம் முற்றிற்று. ஆ ௨௮௮.

---

## சூழ்வினைக்காண்டம்.

---

சூடிசழீஇக் கோலோச்சுங் கோசலநாட் டண்ணல்
விற்பகழி மெய்யதா வோடித் - துடிதுடித்துக்
கோசிகன்முற் றன்பட்ட பாடனைத்துங் கூறியதால்
வீசெயிறுக் கோலம் விழுந்து. (௧)

நாட்டஞ் சிவந்துறுவ னுசிவிட்ட மூச்சினளிக்
கூட்டுமலர்க் கூந்த லுருப்பசியுங் - கோட்டமுறும்
பொற்பினிரு சண்டாளப் பூவையர்க டோன்றியவன்
பற்பவடி நின்றார் பணிந்து. (௨)

கண்டழைத்துக் காதிசுத னெண்ணெண் கலைகளையப்
பெண்டிருக்குப் பெட்பிற் புகட்டினனுங் - கண்டியவற்
றாழ்ந்தவோர் தொற்றத் தரிச்சந் திரன்றனத்தோ
டாழ்ந்ததடத் துற்றனனென் றார். (௩)

மன்னியநன் னெண்ணமெலா மீடேறு மென்றேம்ப
லென்னிமுனி நங்கையர்ப்பார்த் தின்னேபோய்ப் - பண்ணிய
வாசித்துக் கோமான் மதிக்குடையல் வாற்கலவி [யாழ்
வேசித்துக் கொண்டேக நீர். (௪)

என்றுவிடை நல்கலுமே யேந்திழையார் மற்றவனை
நன்றிறைஞ்சி யேகி நறுங்கமலந் - துன்றிளஞ்சி
மாட்டுறையுஞ் சோதி மணிமகுடக் கொற்றவனைத்
தாட்டுணைமுற் றாழ்ந்துநின்று தான். (௫)

மன்னு நிணைநெழிலை வண்மைகளைப் பார்த்தியம்பப்
பண்ணுக்க ளுங்கள் படைத்திலமா - லென்று
வியந்துரைத்தார் கேட்டிறைவன் மின்னனையீர் நீர்யார்
நயந்தடுத்த தென்னவில்லென் றான். (௬)

கன்ன லனுக்குமின்சொற் காரிகையார் காவலனே
மின்னெழிலி னுங்கிவ் விபினத்து - மன்னுறும்யா
நீசப் புலைச்சியர்க ணின்கழலைக் கண்டிறைஞ்ச
வாசைப் படீஇயடைந்தே மால். (௭)

புல்லறிவி னோயேங்கள் போற்றிசையாழ் கீதமொடு
வல்லம் வறிநின்று கேட்கவெனச் - சொல்லியெடுத்
தியாழ்மா டகமுறுக்கித் தந்தியினி தேதடவிக்
கேழோ வியத்திற் கிளர்ந்து. (௮)

காதனுங் கின்னரரு நாணமுறப் பட்டமரம்
பாரதனிற் பல்லவங்கள் காட்டநவை - சீரிருந்
தேழிசையும் பாடினர்க ளிந்தமதி யோடுதிரு
வாழகலத் தண்ணன் மகிழ்ந்து. (௯)

நன்மருங்கு லார்வதன நோக்கிமலர்க் கையளமர்ந்தே
பொன்மணிப்பூண் பீதாம் பரமுதவிக் - கொண்மெனலு
மின்னவையாங் கொள்ளியரீண் டென்னியடைந் தேமல்லே
முன்னியவை கேட்க வுவந்து. (௰)

இல்லையெனு தென்னியதொன் றேற்போர்க் களிக்குமன்னு
சொல்லுமிவை நின்னருளாற் றுன்னிடனே - மல்லிவெபூங்
கிங்களிகர் நின்றன் செழுங்கவிகை யீந்தருளா
யெங்களுக்கின் றென்று ரெடுத்து. (௧௧)

தொன்றுதொட்டு வந்த துலங்கு மணிக்குடைய
யின்றுமகிழ யான்வழங்க யாட்டேனீ - தன்றவே
றொன்றினைநீர் வேண்டி னுதவுவன்மன் னென்றுரைத்தான்
குன்றினைநே ரம்புயத்துக் கோன். (௧௨)

சேட்டதனைப் பச்சையிளங் கிள்ளைமொழி யாரிறைவ
மாட்டாய் மணிக்கவிகை நல்கவெனிற் - கோட்டிணையைப்
புல்லியெமக் கின்பம புரிந்தருளக வென்றனுமெய்ச்
சொல்லமைச்சன் றூதையர்ப்பார்த்து. (௧௩)

கொடுப்ப சொடுப்பர் கொடாத சொடாஅர்
விடுப்ப விடுப்பர் விடாத - விடுக்கிலாற
சொல்லத தலைவனீர் சொல்லி யப்பகொள்க
வல்லதுசெல வென்றறைந்தா னுங்கு. (௧௪)

வள்ளலென யாமடைந்தேம் வந்திரட்போர்க் கொன்றியாக்
கள்ளனெனக் கண்டால வருகலமென் - றள்ளிலைவேற்
கண்ணார் புகன்றார் கதமடைந்து தள்ளுமென்றான்
மண்ணாளும் வேந்தன் மனத்து. (௧௫)

கேகயமன் னூர்நம்மைக் கிங்கரர்தள் வாளுறனுக்
தேக நடுங்கியவர் செங்கையின்யாழ - போகவிட்டு
நண்ணரிய காட்டோடி நன்குதிர முட்கீறும்
புண்ணொழுக நெஞ்சழிந்து போந்து. (௧௬)

விட்டவிறற் கௌசிகன்முன் வீழ்ந்தலறி யாங்குத்தாம்
பட்டவிட ரெல்லாம் பகர்ந்தனர்சேட் - டட்டபுல
வாழ்க்கையன்வெங் கோப மனதெழக்கட் டித்தெறிப்ப
மீக்குலவேற் றிற்சிரித்து வேர்த்து. (௧௭)

வேகத் துடனெழுந்து மெய்த்தவத்தோர் சூழ்ந்தவரப்
பூகத்தின் வாளையுகள் பொய்கையின்மாட் - டேகினன்கண்
டாங்கிறைவன் சென்றெதிரி லந்தணனைவெங் கோபமெனுந்
தாங்கினன்கம் மேலவன்பூந் தாள். (௧௮)

மாக்களை முன் சொன்னாய் வராகத்திற் கூறுசெய்தாய்
பூக்குழலென் காதற புதல்வியர்தம் - வாக்கிலெழும்
பாட்டைப் பழித்தாய பபோவி நீயென்றான்
கேட்டைக குறித்தமுனி கேட்டு. (௧௯)

காவேகர் பூம்பொழிலை நாசப் படுத்திடினு
மீடுடைய நீவிடுத்தா யென்றறிந்தா - ளீகையினை [யைத்
தூய்விலங்கை வீட்டுவனோ தொலைவிலையேன் செய்பிழை
தாயைநிகர்த்தாய பொறுக்கவென்றான். (௨௰)

வேந்தனுரை காதிலுற விச்சுவா மித்திரன்றன்
செந்துவிழி நோக்கித் தெரிவையர்பாற் - போந்திசைந்தா
னன்னோரை நீயடித்தே யாங்கோட்டு காரணமற்
றென்னவென்றானே யிடித்து. (௨௧)

தக்கபடி பேசாத தன்மையினா லிங்கின்ற
விக்குமொழி யேந்திமையார்த தள்ளுவி நதேன் - புக்கதிலீ
தன்றியுநின மகளிய வொன்ப தறிந்திலன்யா
னின்றிதனை நீசமிக்க வென்று. (௨௨)

ஓதி மலர்ப்பதத்தை யொண்முடிசேர்த் தானிருபன்
கோத மகலாத கோசிகனென் - கோதையரா
னேவதுவை செய்தக்கா லின்பிழையை யான்பொறுப்பேன்
காவலனே காணென்றானல். (௨௩)

வேத முடிவுணர்ந்தோய் வேந்தர் புலைக்குலத்து
மாதர்தமை வேட்டன் மரபோவென் - றோதினன்மன்
சாவத்தாற் சண்டாள னானதன் சேய் தீயவரை
மேவத் தருமென்றான விண்டு. (௨௪)

அன்றுமல ரோன்மதலை யாவுகொடுஞ் சாபத்தாற்
றன்றுபுலை தீர்த்திட்ட தூயோனே - யின்றெனக்கீ
சண்டாள னுக்குத் தனிமணத்து மன்னியதென்
விண்டே விளம்பென்றான் வேந்து. (௨௫)

மூன்றுளது தாரமா முழுப்புலையை நீக்கினு
மின்றுமது செய்த வெனக்கரிதன் - றென்றுரைகேட்
டேந்தலை யானிற வேழையரைச் சேர்கென்றான்
வாய்த்தவிறற் காதி மகன். (௨௬)

அம்மொழியு மன்னன் மறுத்திடலு மவ்விருடி
வெம்மையழ லென்ன விழிசிவந்தே - யிம்மனிடை
வெட்டினமசெய் பஞ்சமர்க்கு வேந்ததொழும் பாதியென
விட்டனன்வெஞ் சாப மெடுத்து. (௨௭)

அன்னையன்று மென்னை யறச்சி றிடுங்கொருவ
லென்னாவில வாரா திருக்கிலதந்தே - யென்னகரு
நாடுநிதி வேண்டிடினு நலகுவனிப் பெண்டிராயான்
கூடலனென் றனகோன் குனிந்து. (௨௮)

சொன்னமொழி தப்பாமற் றேன்றா லினியெனக்கு
நன்னரவை நீயாத்து நல்கிடவா - யென்னமுனி
சொற்றிடலுங் கேட்டுச் சுடாகழற்கான மன்னவர்கோன்
மற்றவகை செய்தான் மகிழ்ந்து. (௨௯)

இவ்வுலகை யாளு மேந்தலின தாழிமுடி
தெவவலவாள சேயூரு செய்யகழ - லவ்விழி
மாதணியு மைந்தனணியுப பணியுந் தரவெகுன்
மாதவன்வள ளல்வதனம் பார்த்து. (௩௦)

அன்னவகை யெலலா மளித்துநின்ற கோமானைப்
பின்னருமக் காதிசுதன் பேசினன்கண் - டின்னவைமன்
வீடுபெறற தாநதனைநீ மெலலியல்சேய் சாதஞுவிலை
நீடுடையை நீட்டியக லென்று. (௩௧)

ஆசையினிப் போயிரப்போ மாடையளித் தாலெனக்கோன்
கூறனூர்கொண டானுணர்ந்து கோசிகன்றன் - பீலையினை
மூலவையாக கிழ்க்கிட்டா னேற்றான் முனியாது
தூவிரு சங்குமகன் றாழ்ந்து. (௩௨)

தானுந் தனிமகனுந் தையலுஞ்செங் கற்றணிவை
மானங் கெடாமை மகிழ்ந்துவைத்தார் - வானுமண்ணும்
போற்றுமிறை பிற்கழித்த பொற்கலையைக் கொண்டுவைத்தா
ளாற்றலற வோன்முன் பணிந்து. (௧௩)

மெய்த்தவனே நல்காய் விடையெனக்கென் றானிருபன்
குத்திரமார் நெஞ்சத்துக் கோசிகன்கேட் டித்தினத்தே
யானறிஞர் வந்திரப்ப விட்டிற்கு நேர்ந்தபொரு
ளீநல்கி நீங்கென்றா னால். (௧௪)

எப்பொருளு நாடிநக ரெய்ந்தாய் நினக்களித்தே
னிப்பொழுதென் பால்யாது மில்லைமொழி - தப்புலன்யா
னென்றிரங்கி நீயவதி நல்கியெனக் கான்விட்டான்
மன்றபொரு ளீவலென்றான் மன். (௧௫)

சொற்றிறம்பு வாயாயிற் சூளுறவே தென்றிறையை
நற்றவத்தோன் கேட்டா னரேந்திரன்யான் - சொற்றவறி
னன்னியன்ற னாயிழையை யாதரித்தன் னான்கடைவாய்
மன்னுமவ னாவனென்றான் மன். (௧௬)

காற்பதின்மே லெட்டியைந்த நாளையிலென் னுள்கரத்தின்
பாற்பொழிவாய் பொன்னெல்லாம் பார்த்திவனே - மேற்புகன்ற
காலத்து னல்காயேற் காசுனக்காங் காணென்றான்
கோலச் சடைமுனிவர் கோன். (௧௭)

வணங்கிவிடை பெற்றநது மன்னவனைக் கூய்நீ
யிணங்கியெனக் கீந்தபொரு ளெல்லாங் - குணஞ்சிறந்தோ
யென்னுடனே வந்தபதி யேகொப்புத் தரவென்றான்
மன்னுதவக் கௌசிகனு யன். (௧௮)

அவ்வண்ணம் யான்புரிவ லந்தணநீ போதுகென்றுச்
செவ்வண்ண நெஞ்சிறைவன் செப்பினனாற் - றெவ்வண்ண
வெவ்வனைப் புரிலசகர ரொப்பனைசெய் தாரவன்முன்
[illegible]னுச் சிலமுனிவர் நன்கு. (௧௯)

காவலனுங் காதலனுங் காரிகையுங் கானடந்து
மேவமத மாவிவுளி மேலேறித் - தாவதர்பின்
போதமுனஞ் சேனைசெலப் பொன்னிரத மீதிவர்ந்து
மாதவனவ் வாவி யகன்று. (௪௦)

மாநகரில் வாழுநர்தம் மன்னையெதிர் கொள்ளவுற்றுத்
தேனருதா ரோதித் திருவோடுசேய் - மானவனுந்
தேர்மிசைவா ராமே திருவடிகள் சேப்பவரல்
கார்விழியாற் கணடுருப்ப நீர். (௪௧)

வல்லை யயோத்தி வளநகரி யின்புறத்துப்
புல்லுபுதேர் விட்டிழிந்தான் பூபாலன் - சொல்விருடி
தன்னைநக ருட்கொடுபோய்த் தன்பொருளெல் லாநதந்தே
மின்னுமரி யாதனத்தின் மீது. (௪௨)

வீறறிருப்பச் செய்தவனை வேரிமலர்த் தாள்பரவிப்
போற்றிநின்முன் போந்த புரவலரு - நூறறுறைதேர்
மந்திரிமார் மங்கையரு மள்ளரும்பின் னவ்வறிஞன்
சுந்தரத்தா டாழ்ந்து துதித்து. (௪௩)

நிற்கின்ற தங்க ணிருபனைக்கண் டேயழுதார்
கற்கொன்ற தோளரசன் கையமைத்தீண் - டெற்கொன்று
மன்பொடுநீர் முன்செய்த வப்பரிசே யிம்முனிவற்
கின்புறுமா செய்கமுறை யின்று. (௪௪)

என்றியம்பி னன்னவி யெல்லோரும் வள்ளலடி
நன்றிறைஞ்சி வாய்புதைத்து மெய்நடுங்கி - நின்றிறைவ
நின்னுரையை யார்மறுபபர் நீளுலகி லென்றழுதா
ரன்னதவன் பார்ததவச னாய். (௪௫)

இந்நகரு நாடு மிருநிதியு நீமகக்கு
முன்னளிக்க நேர்ந்தபொருண் முற்றுமியான் - மன்னிழப்பே
னென்மகளிர் தம்மைமணர் திகிருந்தி யென்றிறைவன்
பொன்மலர்க்கை தொட்டான் புரிந்து. (௪௬)

புல்லருந்து மேயரிமாப் பொங்குபசி யுற்றாலு
நல்லமறை கற்றுணர்ந்தோய் நானுனக்குச் - சொல்லலுமன்
வேண்டுமோ விச்சொல் விடுகவென்று வேதியன்கால்
பூண்டனன்கை யாற்கோன் புகன்று. (சஎ)

ஆயி னெனதுபொருட் காளைவிடு வேனோப்
போயகனீ மன்று புறத்தின்றென் - றாயுமறைக்
கோசிகன்சொற றன்வினவிக் கோசலர்கோ னுயேன்செய்
யாசெவையு நீபொறுத்தி யால். (சஅ)

என்றுபுலஞ் செற்றோ னிணைச்சரண்மேல் வீழ்ந்திருந்தா
னன்றெழுதி நான்சமிதே னற்குணத்தோ-யென்றறவோன்
சொல்ல வெழுந்திருந்து தோன்ற லமைச்சரைக்கை
மெல்லப் பிடித்து விழைந்து. (சகூ)

காட்டியிவர் செய்யுங் கடும்பிழையு நீகருத
னீட்டுசடை யோய்நின் னடைக்கலமென் - றேட்டளக
மாதுடனே சேயை வணங்குவித்துப் போறறிவிடை
நீதருகென் றானகன் றேனேர்ந்து. (ரு௦)

முப்புரிநூன் மார்பு முதுமறைதேர் நாவினெடு
துப்புறழ்நீள் வேணியுள தூயோர்க - ளெப்புடையுஞ்
சூழமுடி வேந்தர் துதைந்திறைஞ்சக் கௌசிகனு
மாழியுல காண்டா னமர்ந்து. (ருக)

சூழ்வினைககாண்டம் முற்றிற்று. ஆ ௲௲கூ.

---

## நகர்நீங்கியகாண்டம்.

---

அப்பா லுலகனைத்து மந்தணனுக் கீந்தன்பி
னெப்பாலுஞ் சொன்னிறுத்த வேந்தலவிர் - தப்பாரும்
வாயணங்குங் காதன் மகனு முடன்வரப்பொற்
கோயினின்றுங் கோலமறு குற்று. (க)

கண்டவர்க ளெல்லோருங் காலமழை யாதித்தன்
கொண்டளிக்குந் தாயில் குழவியொடு - முண்டகமும்
பைங்கூழு மாகப் படர்ந்துசர யுத்துறையை
யங்காரா நீங்கி யடைந்து. (உ)

அந்நதியின் கூலத் தளிமிழற்றும் பூம்பொழில்வாய்ப்
பின்னழுது பெட்பினுற்ற மந்திரியர் - மன்னரொடு
புக்கிருந்தான் மேலைப் புணரியிடைப் போய்விழுந்தான்
செக்கதிரோன் றீமைபொருன் சேர்ந்து. (ங)

அக்காலை யாங்கணிகழ் செய்தியறி வான்முனிவன்
புக்கான் கரந்துறைந்தான் பூபதிமீண் - டெக்கால
மீங்கணைவா யென்றமன்ன ரெண்ணரைப்பார்த் தண்ணலினி
யீங்கணையேன் மீண்டென்று னே. (ச)

அந்தவுரை கேட்டினைந்தார் வேந்த ரமாத்தியர்பின்
பெந்தமிறை வாயா மிதுபொழுதவ் - வந்தணனே
வேணிபிடித் தீர்த்துவண மேவச்செய் கின்றனநீ
யேணிபுரப் பான்வருகென் றார். (ரு)

மன்னன் விழையதனை மாபாவ மாமந்தோ
முன்னளித்த வாங்கன் முடிந்தாலு - மென்னுயிர்யான்
கோசிகனுக் கீந்தவள நாடினிக்கொள் ளேனென்று
பேசமுனி கேட்டெதிர்ந்தான் பேர்ந்து. (சு)

கண்டெழுந்து தாழ்ந்தரச னின்றிடலுங் காதிமகன்
கண்டவனைக் காவலநீ யெற்களித்த - மண்டலத்தை
வாங்கிலையேல் யான்வழங்க மற்றிவர்க ளின்றுரைத்த
தீங்கனைத்துஞ் செய்தையென்றான் றேர்ந்து. (எ)

இன்னுசெய் தார்க்கு மினியசெயுஞ் சால்புடையா
யுன்னுதி யின்றிவர்க ளோதுபிழை - முன்னேநிற்
கீந்த வரசுரிமை யானிணிவாங் கேனென்றான்
வேந்தனவ னுற்றான் மெலிவு. (அ)

என்னையிவர் வைதபிழை யான்பொறுத்தேன் வேள்விக்கு
முன்னளிப்ப னென்றபொருண் முற்றுமெற்கு - மன்னவநீ
கல்குவையோ நல்காயோ வென்றுரைத்தான் மாமுனிவன்
கொல்களிற்றுக் கோனதனைக் கேட்டு. (கூ)

வாழ்வுவள நாடனைத்து மாதவயா னிற்கீந்த
போழ்திப் பொருளுமுடன் போனதெனுச் - சூழ்வுற்றே
நுயினுங்கோ பத்தா லளிப்பனென்ற ருள்வழுவே
னுயனையே னல்குவனிப் பொன். (க0)

நீவிடுக வாளென்று நீந்தவன்பூந் தாள்பணிந்தா
னீவதுமுன் மாற்றிவிழி யொன்றிழந்த - தேவனைக்கூய்
வீறுதவ விச்சுவா மித்திரன்ரு னன்னவனை
வேறிடத்தே வைத்து விழைந்து. (கக)

ஆனையின்மே னின்றெறியு மச்சவண்கற் போமளவு
மானபொரு ணீபோ யளித்தாற்கொள் - போனநிற்கு
வேதனமும் வேந்தன்யால் வேண்டுகனி யாதிதந்தா
லோதனநகே ளோலா துவர்த்து. (கஉ)

சொன்றிநரின் வேண்டாவென் ரூன்றலிவ னூண்பெற்ரு
லன்றுநிதி நல்கா தகலனுணற் - கென்றுதடு
நங்கெடுவு நண்ணிற் கரிகுறிதது நின்றவனைத்
தங்கலைவா மற்றைநா டான். (கங)

மன்ன யதிக்குரைத்த மாநிதிநல் கேனென்ரு
லுன்னரசை வாங்கி யுதவுவனென் - னன்னதற்குச்
சம்மதித்தாற் கொண்டனைநி சாலுநமக் கஃதென்று
வம்மவியம் பாசகூட்டி விட்டு. (கச)

வள்ளலுக்கு நல்கிவிடை வந்தவழி மீண்டகன்ருன்
வள்ளிலைவேற் சேனை மகீபரொடு - தெள்ளுமதி
மந்திரியர் தம்மையெலா மாதவன்பின் னேகமொழி
தந்துதிரி சங்குமகன் ருன். (கரு)

உத்தமனீ நீப்பினுயிர் வாழலன்யா னென்றுற்ற
சத்தியகீர்த்திப்பெயரோன் முன்னொருடாத - நைத்தியர்தந்
தேசிகன்முன் போதத் தெரிவைசுதன் சேர்ந்துவரா
மூசிருள்போ முன்ன ரெழுந்து. (கசு)

பாதமலர் கன்றவயோத்திப் பதிகடந்து
மீதழலை வீசுசுர மேவியவட் - காதலனைத்
தோளி லமைச்சன் சுமந்தியங்கப் புன்புழுப்போற்
பாலைக் குழறுடிப்பப் பார்த்து. (கஎ)

பட்டமர மேசெழி பாறைவழி யெங்குமுனி
விட்டபணி தேள்குளவி வெம்பூரம் - கட்டறவி
யீண்டி யிடர் விளைப்பத் தீவினையை நொந்தகன்று
கூண்டினனற் கோமதிப்பே ராறு. (கஅ)

என்மரபி லுற்றவிவ னின்னலினி நோக்கியிரே
னென்றுமவ னென்னவெல்லோன் போய்மறைந்தா- னன்ன
தன்னாடை நங்கைமக னண்ணனதி வண்டுறையைத் [பொழு
துன்னியற லுண்டிருந்தார் சோர்ந்து. (கக)

மார்க்க நடந்த வருத்தமதி மந்திரிதான்
பார்க்கலனுய்ப் பல்காய் பழங்கிழங்கு - பூக்கமழுஞ்
சோலைவனம் புக்குத் துரீஇக்கொண்டு வந்துசெய்ய
கோவிறைமுன் வைத்தான் குனிந்து. (உ0)

கண்டெடுத்து நல்ல கனியவற்றுட் கோசலர்கோ
னுண்டருணீ யுத்தமவென் றீந்திறைஞ்ச - மண்டுகினங்
கொண்டுகவி யுண்டிவற்றைக் குக்கிவளர்க் கேன்பானெய்
வண்டயிர்சேர றல்லதென்றான் மற்று. (உக)

எங்களரசையமுனிக் கீந்தடவி புக்கவெமைப்
பங்கமிலான் பாலடிகி னீகேட்பி - னெங்கினிப்போய்த்
தேடிக் கொணர்ந்தளிப்பே மென்றிறைவன் சீதகன்பொற்
றடிணைவி யோடுபணிந் தான். (உஉ)

சற்றிரங்கி வெள்ளி தருபலநீ ருண்டமர்ந்தான்
மற்றிறைசேய் மங்கையொடு மந்திரியும் - பொற்றடக்கை
யாற்கனியைக் கொண்டருந்தி யாம்பருகிப் புற்றரைப்பாய்ப்
பாற்கண் டுயின்றார் படுத்து. (௨௩)

கோசிகன்ற னுணையினாற் கொண்மூ விடித்துமின்னி
யாசுகமும் வேகமுட னுங்கெழும்பி - வீசமழை
யூற்றானைந் தானை யுடனடுங்கப் பார்ககலனைப்
பாற்றினஞ்சூழ் வேற்கரத்தோன் பார்த்து. (௨௪)

மாறுவது மில்லை மழைதான் சதுமறையோ
யாறுபெரு ராமுன்ன மப்புறத்தே - சேறுமென
வீரமிலாச் சுக்கிரனீ ரேகுநகர் தோறுமுறக்
காரணமெற் கென்னென்று காண. (௨௫)

எந்நகரிற் புக்கே மிடைவனத்தை விட்டினியோர்
நன்னகரஞ் சேர்ந்தாலந் நாளடியேன் - சொன்னபொரு
ணிற்களிப்பன் வேதியனே நீவருக வென்றரசன்
சொற்கவியைத் தாழ்ந்தான் றுதித்து. (௨௬)

வஞ்சமுனி மாற்ற மதித்தெழுந்தான் சல்லியனு
மஞ்சனைத்தோள் வைத்தமைச்சன் முன்னடப்ப-வஞ்சிகர
மோர்கரத்திற் கோன்பற்றி யோர்கரத்திற் கோனூன்றி
யூர்குடிகளை தன்னுளிழிந் துற்று. (௨௭)

நீந்திக் கரையேறி யாங்கொருசார் நீள்பழுவத்
தேய்ந்திருப்பக் காதிமக னேவியபேய் - காந்துவிழிப்
பூதமுன்பின் வந்து புரிந்த கொடுமையினை
யோதமுடி யாதனந்தற் கும். (௨௮)

மாரியொடு வல்லிருளு மாய்ந்தொழியக் காலியியூர்
தேரிலனைக் தான்சாயா தேவிபதி - தாரினன்முன்
னைவருமற் றத்தலத்தை விட்டகன்று கங்கையெனுந்
துய்யநதி சார்ந்து தினைந்து. (௨௯)

பல்வளனும் பார்த்தந்தப் பாகீ ரதிதன்னிற்
சொல்விதியாற் றோய்ந்திழிந்து நீந்தியெதிர் - புல்கனமே
லேறியவ ஞோர்பொழிறக ணெய்தினர்க ளெய்தினனற்
சீறிரவி மேனரலை சென்று. (௯0)

மாமுனிவன் மாயத்தால் வாரணமோ டெண்குகரு
மாமடங்கல் வெந்தரக்கு வந்தந்த - மாமலர்க்காத
தன்னிலிறை முன்னோர்கருப் பீதி தவவிளைத்துப்
பின்னடைந்த தஞ்குழல பேர்ந்து. (௯௧)

அன்னபொழு தாசா னரிச்சந் திரனைவிளித்
தென்னுரைகே ளின்றளவு முற்றவினை - தன்னமினி
மேலுறுவ வெண்ணிலவாம் வேந்தமுனிக் கீயேனென்
னேலரசை வாங்கியளிப் பேன். (௯௨)

இன்னதியா னின்னுடைய விட்டளங்கண்டோதுகின்றேன்
பின்னனைவ காண்டியெனப் பேசினனு - லன்னதுகேட்
டன்றிசைத்த சொறறவறே னையாவென் கேளுடனே
கொன்றிடினு மென்னையென்றான் கோன். (௯௩)

காலையவ னின்றுங் கனைகழற்காற் றார்வேந்தன்
கோலவிழி மங்கைபிறர் கூடவரக் - காலியங்கிச்
சோணமுறீஇத் தோய்ந்தகன்று காளிந்தி சேர்ந்தாடி
நீணனையார் காவமர்ந்தா னேர்ந்து (௯௪)

மாயமனக் கௌசிகப்பேர் மாதவன்வந் தானவனைக்
காயுமிபக் காவலர்கோன் கண்டெழுந்து - போயிறைஞ்சி
யாரணநூ னன்குணர்ந்த வாரியனே யீண்டடைந்த
காரண மென் னென்றான் கசிந்து. (௯௫)

காதிசுதன் பார்த்திவனைக் கண்டடவி நீகுறுகி
வேதனையான் மெய்தளர்ந்தா யென்றுநொந்தே - ஞதலிறு
லெறகளித்த நாமேக ரில்லென் ன லான்மணந்து
செற்குழலென் மக்களைநீ சேர். (௯௬)

வந்தனது நாட்டின் மகிழ்ந்தரசா ளென்றியம்ப
மந்தரத்தோளை மன்னனை முனிவனிறகுத - தந்தபொருள்
பொய்புகன்று கொளளேன புணரேலின் மகவளையெற்
றொய்திடினு மெனறான் குனிந்து. (௩௭)

மறறதனைக் கேட்டு மறைமுனிவ னெஞ்சழன்று
வெற்றிமன்னு மேலவருவ காணடியெனுச - சொறறகன்று
சேய்ககணினறு சீமைபல போதிததுச சைகையிருற
கூய்ககவிகையச செனறான் குழைந்து (௩௮)

பின்னர்ப் பிருகு பெறுதனயன் வந்துறலு
மன்னமன்னுள செல்வ னமைச்சனொடு - மன்னாபிரா
னத்தலமவிட் டோர்கழைககா னுங்கியங்க விசுவா
மித்திரன்கூய விட்டனன்வெந் தீ. (௩௯)

அவ்வனைதனை யஙகி யடாங்தெரிப்பக் கண்டிறைவ
னிவ்வழலிங் கேதெனலு மேந்தாலின் - றிவவன்னி
மன்மரபி லோருயிரை வாய்மடுத்த லாதேகா
தென்னவெள்ளி சொற்று னெடுதது. (௪௦)

செந்தழலோன் வெய்யபசி தீரவெனை யுண்ணியர்நீ
ருய்ந்தகல்க வென்றர[illegible]னோடினன்முன் - மந்திரியென்
புல்லுடலைத தீககளிப்பேன் பூபதிசேய பொன்னைவிட்டுச்
செல்லலென்றான் சேவடியில் வீழ்ந்து. (௪௧)

சிதலை தினப்பட்ட வாலமர மூன்று
மதலையா மற்றதன்வீ ழன்றே - கதழனற்கு
ளன்னீன்றீர் யான்சென்று வீழ்வேனீா மந்திரியோ
டின்னேபோ கென்றனனற் சேய். (௪௨)

தையலந்தச் சொற்கேட்டுத் தன்மகனை மோந்துதழீஇச்
செய்யபற்கள் வீழ்ந்தில்லாய் செல்வனே - தெய்யவுனக்
கித்துணிவு மிவ்வறிவு மெங்கடுத்த தென்றுமுகங்
கைத்தலத்தின் மோதிக் கலுழ்ந்து. (௪௩)

மாதருக்குக் காதலரான் மைந்தரா லிவ்வுலகி
லாதரவா மாதலினீர் நின்மினெனு - வோதுபுசென்
றெல்லையண்ட கோளத்தை யுற்றடரு மச்சேர்ந்தார்க்
கொல்லிமுன நின்றுரும்பிட்டு. (சச)

மறைநெறியில் லாபே வருவிருந்தோம் பாமே
முறைதிறம்பி மூத்தோ ரிகழ்ந்து - பிறர்பொருளை
வெளவியய லார்மேன் மனம்வைத்தே மாயினெனைச்
செவ்வழனீ செற்றிடுக வென்று. (சரு)

பாய்ந்திடலும் பாவகன்றன் பாவை தனுதுசற்பாஞ்
சேர்ந்தவட வைத்தீத் தெறுநமையென் - றோர்ந்துளர்த்தி
லார்ப்படங்கிக் காலை யலர்கதிரைக் கண்டபணிப்
போர்ப்பெனவே போனான் மறைந்து. (சசா)

மண்டு மழுறணிய வான்வளைக்கான் முற்றுநெய்தல்
புண்டரிகம் பூத்திலஞ்சி யாய்ப்பொலியக் - கண்டுமகிழ்ந்
தாயிழையாள் கற்பை யரசன் புகழ்ந்தணைந்தான்
றூய்வா ரணவாசி சூழ்ந்து. (சஎ)

நகர்நீங்கியகாண்டம் முற்றிற்று. ஆ ரு அசா.

---

## காசிகாண்டம்.

---

வாரணவா சிப்பெயரின் மாநதிநீள் வண்டுறையிற்
சிருசனன் மந்திரிசேய் தேவியொடு-வீரமிகு
கோனிறங்கி மெய்ச்சுருதி கூறுமுறை யான்மூழ்கி
யீனமற வேறி யிசைந்து. (க)

திண்களிறு மாய்கின்ற செந்நெற் கதிர்மிளிருந்
தண்கழனி சூழ்காசி சார்ந்துமறைப் - பண்குலவு
நாவினர்முன் னீரிருவர் நண்ணுமணி மாடநிரை
பாவுமறு கூடேகிப் பார்த்து. (உ)

மண்ணுமணிக் கோயிலிடை வாழ்விசுவ நாதனடி
யெண்ணி யிறைஞ்சியகன் றேர்பொதியி - னண்ணியவட்
கொண்டமைச்சன் றந்தபண்டங் கோவதசமைத் தன்பினிட
வுண்டிருந்தா னூழ்வினையை யோர்ந்து. (௩

அன்றடுத்த நாளி லசுரகுரு பார்த்திறையைக்
குன்றடுதத தோளாய் கொடுத்தியெனி - னின்றுகொடு
வட்டபுல வாழ்க்கையன்முன் னூடுபொரு ணீயென்று
கட்டுரைத்தா னெஞ்சங் கனன்று. (௪

எவ்வகையோ விப்பொருளை யின்றளிப்ப தென்றெண்ணித்
தெவ்வடுவேற் கோன்விழிநீர் சிந்திநிறபக் - கொவ்வையிதழ்ப்
பொன்கண்டு மாறறம் புகலா திறையழலென்
பன்னென்று கேட்டாள் பரிந்து. (௫)

கன்னல் புளிக்குமின்சொற் காரிகையே நீயறியாப்
பொன்னுளதோ வென்பாற புகலென்று - மன்னிசைத்தா
னன்னதனைக் கேட்டழுவ லன்புடைய மாதரசி
யின்னமொரு நாளவதிக் கெல். (௬)

பல்லவினைத் தென்னை பதியெனையு மைந்தனையும்
வில்லலிநீ பொன்னென்றாள் வேந்தனனி - யல்லலுழந்
தெல்லிதுவா மென்ன விறைவவிடு மோநமையூழ்
சொல்லுகென்றா ணங்கை துணிந்து. (எ)

ஆயினது செய்வலெனா வண்டலர்கருச் சியமன்னன்
றேயுமிடை மானின் சிரமிசையு - நேயமகன்
சென்னி மிசையுஞ் சிறுபுதல் வைத் தேகண்டார்
மன்னிரங்க முன்னடத்தி மற்று. (அ)

முன்னை வினைமுடுகி முற்றுதலாற் றீவினையே
னென்னிளஞ்சே யில்லா ளிவர்களையின் - றிங்ஙகரிற் [று
போந்துவிற்கின் றேனெனுண் பொருளுடையீர் கொண்மினென
வாந்தெருவிற் சென்றா னறைந்து. (௯)

என்னை விலையிவர்கட் கென்றுமறை யோரொருவன்
முன்னணைந்து கேட்டான் முடிவேந்தன் - வன்னெடுங்கை
யானைமிசை நின்றெறிய மக்கவண்கற் போமளவுக்
கானபொரு ளென்றிசைத் தானங்கு. (௧0)

அந்த விருநிதியை யாரிடத்தே யீவதெனச்
சந்தமறை யோன்வினவத் தாரிறைவ - னிந்தமகன்
கையிலளிக கென்றுணர்த்தக் காபபியனுக் கன்றேனுங்
கையறைந்தா னீவலென்று காண். (௧௧)

உன்கரத்தே மாநிதிய முற்றதோ வென்றரசன்
மின்கவியைப் பார்த்துரைத்தான் வெள்ளியும்பொன்-னென்க
சேர்ந்ததுநீ திட்டமுறிச் சிட்டடன்சேய் மாதிவனை [ரத்தே
யீந்திடுகிவ் வந்தணற்கென் றான். (௧௨)

அந்தவகை மாநிலமன் ஞற்றவடி தாழந்தரிவை
யெந்தமக்கு நெஞ்சமுங்க லேந்தலினி - யெந்தநா
ணின்வதனங் காண்குவனே நீவிடைதா வென்றகன்றான்
மின்விழிநீர் சிந்தி மிக. (௧௩)

அங்கணமா ஞால வரும்பொறையைத் தாங்கலனாய்ப்
புங்கவன்றோள் வைநதிண்டுப் போந்தவெனக-குங்கனமேற்
றுங்கலெங்கன் கூடுமென்று தாயெனையு நீத்தனையோ
பூங்கழற்கா லையா புகல். (௧௪)

என்றுசுதன் வேந்த னெழிற்களத்தைப் பூண்டரற்றக்
கன்றுசினத் தீத்தெறிப்பக் கண்டுவிளைந் - தொன்றுகரம்
பற்றியிழுத தேகொடுபோ யப் பார்ப்பான் றனதகத்தை
யுற்றனன்யாய் செல்ல வுடன். (௧௫)

அக்கொடுமை பார்த்தரச னுற்றலனாய் மூர்ச்சித்துச்
சக்கரமேன் மாழ்கிவிழத் தாங்கியுடன் - மிக்கமதி
மந்திரிதான் றேற்றலுமே மன்னவனு முட்கவலை
சிந்தி யெழுந்தான் றெளிந்து. (௧௬)

பின்மிருத சஞ்சீ வினிப்பேர் மனுப்பெற்ரோன்
மன்முகத்தை நோக்கி மறைமுனிக்குச் - சொன்னபொரு
ளீந்தனைநின் பின்னுமுன்ற வென்றனக்குக கூலியினி
வேந்ததரு கென்ருன் விளித்து. (௧எ)

நல்குவன்வா வென்று நவின்றமைச்சற் பார்த்தென்னை
வில்கொடுநீ பொன்னிந்த வேதியற்கென் - ருல்கவில்சீர்
வேந்துரைப்ப நாயேனை விற்றளிபொன் னென்றன்றேன்
வீழ்ந்துரைத்தான் வள்ளலடி மேல். (௧அ)

அன்னவகை செய்யி னருந்தவற்கஃ தேலாவா [தான்
மின்னினியே யென்னைவிற்றீ பொன்னென்று-மன்னிசைத்
கேட்டென்ன பாவங் கெழுமியதென கென்றுளளி
வாட்டமுற்று மந்திரியு மன். (௧௯)

ஆலவய லோங்குபழை யாறையமர் நீதிதன்னைப்
போலுமரிச் சந்திரன்றன் பொன்முடியின் - மேலொருபுல்
வைத்தென்ன ராயினும் வள்ளலிவற் கொள்ளுமொழி
கைத்தென்றன் கைசகணளித தென்று. (௨0)

போகு மறுகுதொறும் போய்ப்பகர வோர்வீர
வாகுவெனும் பேர்ப்புலைஞன் வள்ளூரம் - வாகுவயிற்
காவினன்முன் வந்தெய்திக் காவிறக்கி வாட்புதைத்து
நீவியங்கை யாலொடுக்கி நின்று, (௨௧)

ஐயே புலைத்தொழிலை யாற்றிடுமென் போல்வார்க்கு
மெய்யேசொல் விற்கத் தகுதியுண்டே - கையீந்தா
னீகருதிக் கேட்கு நிதியமெலா மின்றென்று
தாகமொடு கேட்டான்முன் ருழ்ந்து. (௨௨)

மன்னனுடம் பாடுகொண்டு மந்திரிவிற் பேனுனக்கிங்
கென்னவிலை யேதென்ரு னக்கொலைஞன் - மின்னுபதி
னையிரம்பொன் னென்றமைச்ச னுடனுமற் றன்றேனுந்
தாயவஃ தீவலென்ருன் சூழ்ந்து. (௨௩)

மந்திரிதன் பேரால் வனைந்தா வணைமவற்குத்
தந்து பொருள்வாங்கித் தானவர்தம் - மந்திரிக்கிந்
நைதயநீ போய்வருக வென்றறைய வாங்குமகிழ்ந்
தைதயெனவே போனு னவன். (உ௪)

வாய்மை விதரணத்தின் மற்றொருவர் நேரில்லாத்
தூய்மனத்துத் தோன்ற றுணையடையைப் - பாய்மார்க்க
ணீராட்டியின்றேடு மெற்கேைறவ நின்பணிசெய்
போராட்சி பேர்ந்ததுவோ வென்று. (உ௫)

சாற்றி யரற்றிநின்ற சத்தியகீர்த் திப்பெயரோற்
றேந்திவிடை நல்கிச் செழுமறையா - நாறமிகு
மூனிட்ட காவை யுலம்பொருநின் டோண்மீதிற்
றூனிட்டுத் தன்விதியை யோர்ந்து. (உ௬)

புன்றொழிற்சண் டாளவுருப் பூண்ட தறுகண்மன்
பின்றொடர்ந்து பீடில் புலைச்சேரி - துன்றியவன்
றங்குமுடை நாறுந் தனிக்குடிலைச் சார்ந்தசுமை
யங்குறதகி யீந்துநின்றா னால். (உ௭)

ஆங்கம் மரவி யரசனைப்பார்த் தேமேதே
பாங்கிற் பிணஞ்சுடற்குக் காற்பணமு - மோங்குகொள்ளி
யாடையுநீ வாங்கி யளித்தெனக்கு வாய்க்கரிசி
வாடலின்றி யட்டுண்டு வாழ். (உ௮)

என்றியம்பி ஞனக வேந்தலரிச் சந்திரனு
நன்றெனவே வெஞ்சுடலை நண்ணியவட் - பொன்றினர்மெய்
கொண்டெரிந்த பாடைக் கொடுங்கழியாற கொட்டிலொன்று
கண்டுபுக்குச் சொன்னபணங் கால். (உ௯)

வெய்யகொள்ளி யாடை வெருந்துரியோர பாக்வாங்கி
யையகொள்ளென் றுண்டாற் களித்ததைவாய்ப் - பெய்யரிசி
புட்டிலின்கண் ணேத்தட்டி முன்பிணங்கொணடேபோட்ட
கட்டிலின்கண் வீற்றிருக்குங் கால். (௩0)

அந்நகரோ ரம்பலத்தில் யாமினியந் தித்தேதன்
மன்னவனைத் தேடி மதியமைச்சன் - றுன்னியிடு
காட்டிற் சிறுகுடிலிற் கண்டிறையை யேங்கிமனம்
வாட்டமுற்று வீழ்ந்தலற மண். (௯௧)

நன்றுங்கா னல்லவாக் கண்டு நுகர்ந்தயா
மனறுங்கா லல்லற் படலாமோ - வின்றுடாய்
தோச்சித் துணைவெனத் தேற்றியவன் கைக்களித்தான்
வாய்ச்ச வரிசிதனை மற்று. (௯௨)

மற்றதனை மந்திரிமா மன்னனடி தாழ்ந்தேற்றுப்
பெறறமதற் குப்புல்லிற பெட்பினல்கிப் - பிற்றைமயத்
தோடுவிழுந் தண்டுலத்தை யுற்றெடுத்துக் குத்தியட்டுப்
போடவிறை நின்றுன் புசித்து. (௯௩)

காசிகாண்டம் முற்றிற்று. ஆ ௪௧௯.

---

## மயானகாண்டம்.

---

பின்னடிமை கொண்ட பிராமணனும் வன்கணனிற்
றுன்னியசேய் மாதிவருட் டோகையன்னுள - பன்னுமலை
லிட்டு மனைமெழுக னெற்குத்த லெபபணியுந்
திட்டமுறச் செய்தொழுகத் தேர்ந்து. (௧)

கோமகனுங் கோலஞ்சித் தூக்கமொழிந் தேவிடியச்
சாமமெனத் தாமெழுந்து போய்வனத்தி - லோமவிற [து
கிந்தனம்பைங் கூர்ச்சமிவை கொய்தெடுத்துக் கொண்டணைந்
தந்திடுவகூ ழூண்டெரித் தான். (௨)

உற்றசிறு ரோடொருநாட் போய்த்தேவ தாசனெனுங்
கொற்றவன்சேய் கானங் குறுகியவண் - வற்றுதுவர்
கட்டிச் சுமந்து திரும்பிவருங் காற்கண்டு
வட்டைக்கோர் பால்வண் குடைச. (௩)

கொய்யவது தன்சுமையைக் கோளியின்கீழ் வைத்திறக்கி
யையெனப்போ யாங்குப் பறித்திடலும் - வெய்யமுனி
கறபனையால் வந்து புதர்க்கட் கரந்துறைந்த
சர்ப்பங் கடித்தபடந் தாழ்த்து. (௪)

அக்கணமே மாய்ந்தா னலறிவெரீஇ வீழ்ந்திளைஞன்
சக்கரமார் பொற்றேர்த் தாணிகண்டு - துக்கமொடு
பாய்ந்தோடும் பச்சைப் பரிசெலுத்திப் போய்க்குடபான்
மாய்ந்தான் மறிகடற்குள் வீழ்ந்து. (௫)

நந்த மெலுவனின்ன நண்ணுமைக் கேதுவென்னென்
றந்தவடக் கிழமர்ந்த மக்களெலா - முந்தியவன்
சென்றதிசை சென்றிறந்து நிற்பப் புரட்டினர்பார்த்
தொன்றிநனி செல்ல லுளத்து. (௬)

மீண்டங்குத் தத்தம் விறகெடுத்துக் கொண்டொல்லை
மாண்டநகர் மாலையொடு புகுமகற - றேண்டிநின்ற
தாயுடனன் ஞன்மடிந்த தன்மையிட நன்கறைந்து
போயினர்தம் மில்லம் புரிந்து. (௭)

ஆயிழையாள் கேட்டழுங்கி யவ்வுரையை மெய்ம்மறந்து
வாயிலிடை வீழ்ந்தெழுந்தங் குண்மருவி - யேயபுணி
யாவு மறவியற்றி யாளுடைய பூசுரன்றன்
சேவடிமுன் சென்று விழுந்து. (௮)

நாகத்தான் மாண்டொழிந்தா னுன்பெற்ற வோர்குமர
னேகத்தா வாங்குவிடை யென்றழலும் - வேகத்தாற்
சீதிமறை யோனடிமை செத்தானிற கேனட்டஞ்
சேறலொழி தேமொழிநீ யென்று. (௯)

சொற்றனன்கேட் டொண்ணுதலா டொன்றவிறந் தானென்
பெற்றவயின் பேயேற் கெரியாதோ - சற்றிரங்கி [ளூற
நல்குவிடை போயெடுத்து நானடக்கஞ் செய்திங்கே
யெல்வருமுன் னெய்துவனென் றாள். (௧௦)

நின்மொழிதப் பாமைநடப் பாயெனினீ யேகென்று
கன்மனைத் தன்றேருன் கழறலுமே - மின்மருங்குற்
காரிகைதன் கால்பின்னக் கார்க்குழல்கண் ணீருடனே
சோரவுள முந்தத் துணைந்து. (கக)

சுற்றநகர் தாண்டிமசார் சுட்டி யுரைத்தழிபோ
யுற்றலங்கை யோரிகுறர் சூழநப் - பெறுமகற்
கண்டு கணையெறிமான் போலிறங்கி மெய்ம்மறந்து
மண்டலமேன் மாழ்கிவிழுந் தாள். (க௨)

பின்னெழுந்து பேதை பெருங்கயற்க ணீராட்டிப்
பொன்னலர்க்கை யாலெடுத்துப் புத்திரனை - துன்னவுட்
தகுமடி மேல்வைத்தே சாதகம்பே யும்மிரங்கச்
செங்குமுத வாயைத் திறந்து. (க௩)

இந்திடத்தின் மாசுணத்தா னீகடியுண் டேயிறப்ப
முந்துவினை யாது முயன்றறியே-மைந்தாவோ
வென்னிறையு யானுமினி யாரைநம்பி வாழ்வமுரை
யென்ன வரற்றி யிசைத்து. (க௪)

தன்மைத்தோண் மீதிற் றனிமகனை வைத்துக்கொண்
டன்னத்தின் றாவி யனிச்சயஞ்சும் - பொன்னடிக்கட்
கன்முள் ளுறுத்தக் கணங்குறளசெங் காயடர்ப்பப்
புன்முடைநா றீமம் புகுந்து. (க௫)

வானவர்தங் கரப்பின் மகனைவைத்தே கிக்கரிந்து
போனகுறைக் கட்டை பொறுக்கிவந்து - தானடுக்கிச்
செங்கனலை மூட்டிச் சிறுவனையக் கட்டையின்மே
லங்கெடுத்து வைத்தா ளழுது. (க௬)

கண்டு கனல்விளக்கங் காவலவன் சார்ந்தேடி
மண்டிருளில் வந்துதனி வாய்க்கரிசி - தண்டறவே
காற்பணநல் காதே சுடஞ்சுடலென் னென்றெறிந்தான்
காற்கொட்டொக் கன்பூனையக் காய்ந்து. (க௭)

சேவடிமேல் வீழ்ந்து தெரியாதிவ் வூர்வழக்கம்
பாவியெனக் கேது பணம்வழங்க - தாவிலருட்
கண்ணவரா வான்முடிந்த காதலனை யான்றகனம்
பண்ணவரு ளென்றாள் பதைத்து. (௧௮)

செந்திருவே தீண்டலெனை யான்புலையற் கோரடிமை
தந்துமுழத் தானைபணங் காலாண்டாற் - கிந்தநிலை
நின்மகனை நீசுடுக வெற்குரிய வாய்க்கரிசி
மன்விடுவன் காணென்றான் மன். (௧௯)

காசங் கிடம்புழுதி யாயினிவ ணிம்மகனைப்
பாசுறழ்தோ ளேற்றிப் படர்ந்துசுட - லேசெனவே
யென்றுநான் செய்குவனோ வென்றிரந்தாள் கோதைகழுத்
தொன்றனைக் கண்டான்கோ னுற்று. (௨௰)

வஞ்சி நினது வளைமிடற்றின் மங்கலநாண்
துஞ்சித் துலங்கப் பொருள்சரத்திட - கொஞ்சமுமில்
லென்றிசைத்த வேலா விதனையெனக் கீதியென்றான்
குன்றிசைக்குந் தோளான் குறித்து. (௨௧)

வார்முரசங் கேட்டசுணை மான மடப்பிமதான்
றாமிசைவீழ்ந் தேபரதத்திங் கென்கணவ - னேதொருவர்க்
கல்லநுமற றியார்க்கு மறிவருநா ணிவ்விழிரு
ளெல்லுமதோ கண்டானை யுற்று. (௨௨)

இத்தலத்தே புக்கபின்னை யெம்பெருமா னார்மொழியும்
பொய்த்ததுவோ மாயோன்புராரியினு - மெய்த்தவனே
நல்லதின்றென் வாடரிய சறபொழிய தென்னென்று
சொலவிச சொரிந்தனள்கண் முத்து. (௨௩)

வாய்மைய தவிர்வின் மன்னன் மனமறுகிச்
செய்முகத்தைப் பார்த்தேங்கிச் சிறியா - ளாங்கடித்த
போதனையும் பூவையையும் விற்றகொடி யேனைநோந்தென்
றேதுகினையன் புற்றசெல்வா வோ. (௨௪)

அன்றெனது கந்தரத்தை யார்வமொடு பூண்டழநீ
துன்றுசின வேதியன்கை தொட்டீர்ப்ப - நின்றிருந்தேன்
பாவையுனைத் தோட்கொணர்ந்து பாலகனை நீச்சுடலும்
பாவியின்று காலெறிந்தேன் பார்த்து! (௨௫)

வென்றிவடி வேற்றாதை வெட்டியாற் காட்பட்டா
னென்றுமினி யெய்திநமை மீட்கவல்லா - னென்றெணியோ
வாருயிரை நீத்திட்டா யப்பாவோ வென்றரற்றிப்
பாரகத்தே வீழ்ந்தான் பதைத்து. (௨௬)

சொண்கனிவ ளுமென்று கோதைதுணிந் தேர்தலடித்
தண்கமலக தாழ்ந்துதலை வாபுவியின் - கண்ணெவர்கருந்
தெயவ மவருத்ததல்லாற் சேராது வேறினிநீ
னையலற றுன்னென்று ணைந்து. (௨௭)

நீசனுக்கி யான்றொழும்ப னீலவிழி யாயவற்குத்
தாசுபண நல்கேனேற் றுன்னுநவை - நீசடிதி
போந்துனையாள் வோற்குப புகன்றுடைபொன் வாகிவந்தெற்
கீந்துசுடென் மைந்தனையென் றான. (௨அ)

வன்பாணிகர்த்த மனத்தனிப்பொன் றேடுடையை
யன்பாற கொடாது னறகொடியோன் - றுன்போவி
யிம்மகனைப் யார்த்திருதநி யேகியளித தாற்கொணர்வல்
செம்மலிவ னென்று தெரிதது. (௨௯)

தாரணிமா மன்னன் றனயனய னின்றழுங்க
நேரிழையாள் வெஞ்சுடலை நீத்தொல்லைக - காரியலும்
கன்மதில்சூழ் காசி கடிநகரி வாய்நுழைந்து
பொன்மனையரர் வீதியிடைப் புக்கு. (௩0)

ஆங்க ணுவளகத்தே யணமிச் சிலபடிறர்
பாஙகி னெடுத்துப் படர்ந்தபுறங் - தூங்களவிற்
காசணிகள் கைக்கொண்டு காதி யெறிந்திட்ட
தூகியிறை கான்முளையைக் கண்டு. (௩௧)

இம்மதலை யார்மதலை யென்னவல மந்துகண
மெம்மதலை தன்னை யெறிந்ததுகொ - லம்மவெனு
வாடுறறுச் சேயை வனசமலர்க் கையேந்தி
நாடுற்றாண் மெய்க்குறியை நன்கு. (கஉ)

விடிந்திடுமு னவ்வூர் விறற்கா வலர்க
ளிடிந்தமதி லேறி யிழிந்தாங்- கடைந்திறைவன்
செததமக வோடு தெரிவைதனைக் கணணுற்று
மொத்துபுகை யார்த்து முனிந்து. (கந)

மண்டபத்தில் வீற்றிருக்கு மாமகுட மன்னவன்முன்
கொண்டுவிட்டுக் கும்பிட்டுக் கொற்றவனே - கண்டிரவுன்
மைந்தனையிம் மாது மறுகெடுத்துக கொண்டிருககத்
தந்தனமீண் டென்றிசைத்தார் தாழ்ந்து. (கச)

அந்தமொழி கேட்டரச னங்கை யமைத்தவளை
வந்தபடி யாவுமுரை வல்லியெனச் - சந்த்ரமதிப்
போததெரிவை தாளைப் பெருமலர்க்க ணீரருவி
வார்ததலம்ப நின்றிறைஞ்சி மறறு. (கரு)

என்று நரனை யெடுத்தருந்து மோரரக்கி
வென்றிவடி வேலிறைவ நின்னகர்வந் - தின்றிரவிற்
றினறிடயா னின்மகனைத் தேர்ந்து புறஙகொடுபோய்க்
கொன்றனன்கா ணென்றுள் குழைந்து. (கசு)

இன்னற் கடல்கடப்பா னேந்திழையா ளோர்ந்துளத்துச்
சொன்னமொழி கேட்டுத் துணைவளைப்பாராத - தந்நிருபன்
செய்ய முகத்திவளே செல்வனைக்கொன் றாளென்று
மையமெனக் கிலவென்றா ராய்ந்து. (கஎ)

அந்த நிலைக்கணரிவைகரம் யாத்திர்த்து
வந்தவர்கண் மன்னு மகனையெடுத் - தாந்தடிப்பின்
சென்றிக் கொடியள் செகுப்பக்கண் டீர்த்தணைந்தே
மின்றுயிர்சாம் விட்டிடுமெனன் றார். (கஅ)

சொன்னவடி தானிச் சுரிகுழலா டன்னடியோ
பின்னை யெவரடியோ பேர்ந்தோடி - யிந்நொடிக்க
ணோக்கி யணைதிறொறு நோன்கழற்காற் காசியர்கோன்
போக்கினன்சில் லோரைப் புகன்று. (௩௯)

போற்றி யிறையடியைப் போந்தவர்க ளங்கெறிக்கண்
மாற்றி மறைமுனிவன் றீட்டிவைத்த - கோற்றொடியா
டன்னடியே கண்டோடித் தாழ்ந்திவள்கால் வைப்பல்லான்
மன்னவிலை மற்றடியென் றார். (௪௦)

சொல்லுதிநீ யுண்மையெனத் தோகைமுகந் தானோக்கிக்
கல்லுறழ்தோள் வேந்தன் கழறவெனை - யல்லதிலை
களளி யெனவறைந்தாள் காவலன்கே ளாவியந்தே
யுள்ளங் கசிந்தா னுற. (௪௧)

அந்நிலையிற் கங்குலருந்தவன்செய் மாயமொடு
மன்னனரிச் சந்திரன்றன் வல்வினையு - மன்னிரிய
மங்கையின்கைக் கட்டுடனே வாரிசத்தின் கட்டவிழச்
செங்கதிரோன் வந்தனன்கீழ்த் திக்கு. (௪௨)

புத்திரனை யந்தப் புரங்கொடுபோ மாறிசைத்து
முந்தை விதிப்பயனை முன்னிமுன்னி - மெத்தநொந்து
மாசிலாக் கற்புடைய மானைவதை செய்விட்பான்
காசிபதி யெய்ந்து கருத்து. (௪௩)

தூதுவரைக் கொண்டழைத்துத் தொல்வீர வாகுவெனுங்
காதகனைக் கண்டிந்தக் கள்ளிதனைக் - காதுகநீ
கட்டுடனே கொண்டேகி காய்களத்தி லின்றென்று
கட்டளைசெய் திட்டான் கவன்று. (௪௪)

கோள்வீர வாகுக் கொலைஞன் குரிசிலிணைத்
தாள்வீழ்ந்து போற்றித் தளரணங்கைத் - தோள்வீக்குந்
திண்கயிற்றாற் பற்றித் திரும்பிப் புலைச்சேரிக்
கொண்குடிசை தன்னையடைந் துற்று. (௪௫)

நன்றெழும்ப ஞானவரிச் சந்திரற்கூய் மன்மகனைக்
கொன்றவிந்தக காளியைநீ கொணடேகி - யின்றெறிக
வென்ன விளம்பிடியோ டிந்தா னவன்கரநதே
மின்னுதன்கை வாளை விதிநது. (சசு)

வாளுடனே மாதை மலர்க்கரத்திற் கொண்டிறைவேய்த்
தோளியைத்தான் பார்த்தழுதகத்தோகைகணெடு-வேளனையா
யென்பொருட்டு நீயிறநக லென்றான்கோன் பின்றொடர்ந்தா
னன்பமைச்சன் வநதிறைஞ்சி யாங்கு. (சஎ)

பின்னர்த் திரண்டு சனங்கள்பல பேசிவரக்
கன்னிகைநேரன் யாதத கயிறுபற்றி - மன்னவர்கோன்
வன்னமணிந்த தோரணநீள் வாயிகாநது வந்திறுநதான்
பொன்னகரி னெசிப புறநது. (சஅ)

வண்டமர்தார் வள்ளலுக்கு வஞ்சமனக் கௌசிகன்றான்
கணட விடர்முடிவு காணபதறகன் - றண்டரொடு
வாசவனை நாரதனை மாவசிட்டன் கூட்டிகனொ
டாசினிக்கண வந்துறைந்தா னால். (சகூ)

வந்துவிசு வாமித் திரமுனிவன் மன்னனெதிர்
நந்திலன்யா னுடனேககென் றேசாறறி - யுய்ந்தரக
மீவ்வுயிரு நீபெறுக வென்னவவன் றான்பரவி
கவ்விவிழி யோடரச னைநது. (ருo)

ஒழுக்க முடையாரிங் கூற்றுக்கோ லன்ன
விழுகக வுடையார்க ஸிசைப்ப - வழுககியுந்தம்
வாயிறைற் றீய வழங்குபவோ பொய்யியம்ப
நீயெமககுச் சொலலுவதென் னோர்ந்து. (ருக)

செய்மையுடன் சேறலினு னற்றனைவு னெவ்வொளிக்கும்
போயொழியா வெவ்விருளைப் போக்குதலாற - பாயவொளி
செம்பொருளைக் காட்டுதலாற் றேசிகன்மெய் யாலுஞ்சொன்
னம்பி யதனைவிடே னாம். (ருஉ)

நில்லாத யாக்கையையு நீளரசின் வாழ்வினையு
மெல்லா நிலையினவென் றெண்ணியிசைக் - கொல்லாத
வெய்ய நரகத்தே வீழ்விக்கும் பாவத்தைச்
செய்யத் துணியலம்யாந் தேர். (௫௩)

என்ன முகம்புலர்ந்து மாய்ந்திருடி யேகினன்கூ
யன்னவனை மானீ யறைந்ததிற - மிந்நிலைக்கட்
கண்டகல்க வென்றனாப்பக் காதிமக னாணமுட
னண்டியவ னோடமர்ந்தா னாங்கு. (௫௪)

பேதைகைந்நாண் பற்றிப் பிணஞ்சுடுகோ லாற்றள்ளித்
தாதவிழ்தார்க் கோசலர்கோன் றன்னிறந்த - காதலனண்
ணத்தலமுற் றான்றெய்வ மன்பினினைந் தேத்தியிரு
நெய்த்தகுழல் பூர்வமுக நின்று. (௫௫)

என்றறையத் தெய்வந் தொழாஅ ளிதயத்தி
னன்று பராய் நாயகனை நன்னுலதா - ளின்றெளியே
னாவியிறப் பஞ்சி யறம்வழுவல் வாழியெனாக்
காவலனைத் தேற்றிநின்றாள் கண்டு. (௫௬)

நின்மலனாய்ப் பூரணனாய் நித்தியனாஞ் சிற்பரனாற்
பன்மறையின் பல்லறந்துண் மிக்கவுண்மை - நன்னெறிக்க
ணின்றனனே னுண்டே னிறையிவண்மாட் டறின்மை
யொன்றுகெனா வீசினனாள் வாள். (௫௭)

மாசடையா நெஞ்சத்து மன்னன் கரத்தெடுத்து
வீசியவவ் வெள்ளயில்வாள் வீழ்ந்தன்று - மூசரிக்கு
நற்பிரசம் வாக்கு நறுமலர்த்தார் போலசையாக்
கற்புடைய நங்கை களத்து. (௫௮)

---

மயானகாண்டம் முற்றிற்று, ஆ ௪௭௭.

---

# மீட்சிக்காண்டம்.

அங்கண் விசும்பி னடலரவ முண்டுமிழுந்
திஙகளெனத் தேவி திகழ்ந்தனளாற் - றுஙகமுனி
மாயப் பெருநெருப்பின் மன்னினன்மா மன்னவர்கோன்
றூயொளிய பொன்னிற் சுடர்ந்து. (௧)

வானிந் திரன்முன்னோ ரோடு மறைவசிட்ட
ஞானந்த மாடி யவளியுற்றான் - கோனின்று
நன்மையுற்றா னென்னினொரு நக்கியம்பி யாடினனுங்
கன்மனத்துக் கௌசிகனுங் கண்டு. (௨)

மாயவன்முற் றேவர்களு மன்னு கணத்தவருங்
காயுமிப மாமுகனுங் காங்கெயனும் - பாயபுடை
கண்ணமலை மாதுடனே நம்பனரு வெள்விடைமே
லண்ணலெதிர் வந்தா னமர்ந்து. (௩)

கண்விழி நீர்பொழியக் காவலர்கோன் றேவியுட
னண்டர் பிரானை யணங்குடனே - தண்டெனமண் [ளத்
வீழந்திறைஞ்சி யேததியன்பின் வெவ்விடர்தீர்ந தின்பவெள்
தாழந்தவச னுய்நின்றா னங்கு. (௪)

அப்பூதி நற்புதல்வ னன்றெழுந்த வாறேபோற்
றப்போதா வள்ளலரிச் சந்திரன்சேய் - துப்போதி
வீசயிறகை யேள்விளிப்ப வீழ்ந்தெழுந்து தாள்பணிந்தான்
காசியர்கோன் மைந்தனொடு கண்டு. (௫)

பால ருயிர்த்தெழுதல் பார்த்தங் கயோத்தியர்மன்
பாலிகழுந் தீங்குதலைப் பாவையன்னாள் - சாலிவயல்
சூழ்ந்திலங்குங் காசிபதி சூழ்ச்சித் துணைவனன்பாற்
றூழ்ந்திசைத்தார் சங்கரனற் றாள். (௬)

ஆயபொழு தெம்மா னழைத்தமுனி கௌசிகனை
நீயிறைவற் கூறு நிகழ்த்துவகை - யேயதிற
னீந்நிலையா ரெல்லா மினிதுணர வின்றெடுத்துப்
பன்னுகென வாய்மலர்ந்தான் பார்த்து. (௭)

கோசிகனெஞ் சுட்கிக் குறுமதியச் செஞ்சடையான்
வாசமலர்த் தாள்வணங்கி வாழ்த்திநின்று - வாசவன்முன்
மாவசிட்டன் வாய்மொழிகருத் தான்மாறுச் சொற்றமுதல்
யாவையுஞ்சொற் றனங் கெடுத்து. (அ)

பின்னமலன் பேதாய் பெரிதிழைத்துந் தீங்கிறைக்கு
நின்னெணமுற் றுயிலேயே நீமனத்து-நுன்னிநனி
வென்றியையார் தோல்வியையார் மேயினர்க ளீணகொக்க
வென்றியம்ப வெய்தியகத் தீடு. (௯)

விச்சுவா மித்திரப்பேர் மேயமுனி வீழ்ந்திறைஞ்சி
நச்சுவாய்ப் பாம்பணிந்த நாயகனே - பிச்சனே
னண்ணலரிச் சந்திரன்ற னுசில் குணஞ்செயலை
யெண்ணியறி யாதிகழ்ந்தே னேற்று. (௧0)

வேத முணர்வசிட்டன் வென்றவன்யான் றோற்றவனென்
மாதவத்திற் பாதி மகிழ்ந்தரசற் - கீதலுட
னன்றவனெற் கீந்த வரசுரிமை யாவுமவற
கின்றளித்தல் செய்தனனென் றான். (௧௧)

காய்ச்சியபொன் றுணியினைக் கன்னத்தி லிட்டாங்குப்
பேச்சதனைக் கேட்டுப் பெரிதுருகி - மாச்சுருப பார்
தாரதிப னொற்றோர்க்குத் தந்ததுபின் வாங்கிவிழே
றூரளற்றி லந்தணவென் றான். (௧௨)

பாரத்திலகேள் யானே படர்ந்தபடர்ந் தாங்குதவுஞ்
சீர்த்தவமே விட்டென் செழுநலத்தைக் - காத்தமர்வேன்
மான்வசிட்ட னேநைந்த வஞ்சினைந்தா லுன்முறைமை
யான்மதித்துச் சோதித்தே னீண்டு. (௧௩)

ஆஞகநின் ஞடென் றருந்தவத்தோன் சொற்றதுங்கோ
ளுளிழிருற் காயீமங் காத்திருந்தேன் - காளையொடு
மாதைமறை யோருவிற்று மாநிலமேய் யாஞரா
னீதியனறு நீயாள்கென் றன். (௧௪)

அந்தவுரை கேட்டணுகி யங்கியான் முன்பிறைஞ்சி
மைந்தனையு மங்கையையு மெறருவிற்ற - னிந்தனையோ
காவலவன் றேர்பொருட்டுக் காசினித்தே வாய்க்கொண்ட
வாவணமீ தென்றிட்டா னாங்கு. (கரு)

சாலனுமக் காலமலன் காலணைந்து தாழ்ந்தேத்திக்
கோலமுடி வேந்தைக குறித்திவணீ - சீலமிலா
நீசனுக்கா ளாவையென்று நீசனாய்த் தோன்றியுனை
யாசறக்கொண் டேன்முறியீ தாம். (கசு)

நீயிருந்து காத்த நெடியசுடு காடனைத்தும்
பாயமகச் சாலையே பாரொன்ன - வீயுடலைத்
தீக்குமிடஞ் சொன்ன திறந்திகழக கண்டடைந்தான்
வீககுகழற காலோன் வியப்பு. (கஎ)

செம்மலைக்கண் டன்பாற் றிகழுமயோத் திப்பதிசேர்ந்
திம்முனிவ னோர்தவமு மேற்றாண்டு - செம்மைமுடி
தாங்கி யெமதுபதஞ் சார்கவந்தத் தென்றிறைபின்
பாங்கின் வலாரிமுகம் பார்த்து. (கஅ)

நீயு முனிவரரு நீள்கா சியர்பதியும்
வாயிலயோத் திப்பதியிம் மன்னனுடன் - போயிவற்கு
மாமகுடஞ் சூட்டி மகிழ்ந்துறையுள் சேர்கவென்று
வாய்மலர்ந்து போனான் மறைந்து. (ககூ)

சொற்றபணி தாழ்ந்து சுடர்முடிக்கட் கொண்டுநின்றார்
கற்றடிவேற் கைம்மகவான் முன்னோர்கண் - மற்றைக்
கடவுளர்தஞ் சார்பு கலந்தனர்போ யந்தச்
சுடலை யகன்று துணைநது. (உ0)

கூர்த்தவிரு ணீங்குதலுங் கோபதிமா யோகியர்சொல்
வார்த்தை மறுப்பஞ்சிக் காசியர்மன் - னோர்த்தகொடித்
தேரிவர்ந்து கோசலர்கோன் றேவிசுத னோடமைச்சன்
சாரலவர் தாமுமுட னார்ந்து. (உக)

காசிபதி சேனை கருங்கடல்போன் முன்னடப்பத்
தூசிகுடை யாதபத்தாந் துன்பமற - மூசியெழு
வார்முரச மார்ப்ப வளநகரை நீத்தணைந்தான்
வாரணவா சிக்கரையின் வாய். (உஉ)

அந்நதிநீ ராடி யகன்றங் கனைவருடன்
றென்ன யமுனை சிவணியதி - னன்னரும
மூழ்கித் தணைந்து முதிர்பவத்தின் மூலத்தைப்
போழ்கங் கையையடுத்தான் போந்து. (உ௩)

சேர்ந்து விதியுளியத் தீர்த்தத்திற் றோய்ந்திறைவன்
றீர்ந்திந் திரன்முதலோ ரோடுதில்லம் - வார்ந்தகிரி
மண்டு தடம்பலவு மற்றிகந்து கோமதியின்
வண்ட லிடையிறுத்தான் வந்து. (உ௪)

கூட்டிக் கொடுபதியைக் கோவணனுங் குற்றதிறங்
கேட்டுவகை பூத்துக் கிளர்கடறபா - லோட்டாநதி
போலனையர் தானை புரசனங்கள போந்திறையைக்
காலிறைஞ்சி வீழ்ந்துநின்றார் கண்டு. (உ௫)

பொன்னகர்க்கோ னொதியரும் போதவிரு சேனையுட
னந்ததிவிட் டேகி யயோத்திநகர் - மன்னவன்பொற்
கோயில் குறுகிக் கொடித்தேரிழிந்துபுக்கான்
பாயமணி மண்டபத்தின் பால். (உ௬)

வாய்மையரிச் சந்திரனை மாமகுட மைந்தவித்தோர்
வாய்மலர்ந்து வாழ்த்தெடுப்ப வாசவன்றன் - சேயமலர்க்
கையெடுத்துச் சூட்டிக் கரைந்தாசி போய்ப்புகுந்தா
னையவம ராவதிக்க ணாங்கு. (உ௭)

ஆசியுரைத் தந்தணரு மாங்ககலக் காதிமகன்
கோசலர்கோ மானை கொடுத்தனன்கொண் - மாசினுணக்
கென்றவத்திற் பாதி யெனவுதக மங்கையெடுத்
தன்றெவருங் காண வளித்து. (உ௮)

யானறியா தன்னை யிகழ்ந்தவெலா நீபொறுப்பாய்
மோன வெனுஅ முனிவசிட்டற் - கானுவுனை
சொற்றிறையைத் தேற்றிமகன் றேகையொடு மந்திரியை
யுற்றனன்கான் வாழ்த்தி யுவந்து. (உக)

மின்னு மணிக்கவரி வீசவரிச் சந்திரன்பின்
பொன்னணைமேல் வீற்றிருப்பப் பூமகன்சேய்-தன்னைமற
மந்தணர்க்கு மாமோ வெனப்பரவிக கேட்டனனற்
கொந்தவிழ்தார்க் காசியர்தங் கோன். (௩0)

தோய நிலத்தியல்பாந் தொல்குணமே கௌசிகனுக்
காயதென மாவசிட்ட னுங்கறைய - நீயெனககோ
தன்னன் வரலாறென் மணலடி தாழ்ந்துரைப்பச்
சொன்னன் முனிவனிது சூழ்ந்து. (௩௧)

மீட்சிக்காணடம முற்றிற்று. ஆ ரு0அ.

---

## உத்தரகாண்டம்.

---

கன்னல் வயலுடுத்த காசிபதி நீகேட்டி
பொன்னலர்வாழ் வோன்மரபிற போந்தகுசன் - றன்னெழு
மைந்தன் குசற்குக் கிரிவிரிச மாநாடு [வாய்
தந்துகுச நாபற்குத் தான். (௧)

செங்கெலுயர் கௌசாம்பித் தேயம் வசுர்த்தனுக்குத்
தன்னிகரில் வாரணமுந் தார்வசுவுக் - கன்னமமர்ந்
தார்வனசம் பொய்கைக் கலரும் வசுமதியு
மார்வமுட னேயளித்தா னல். (உ)

அங்கவரிற் கௌசாம்பி யாள்குசநா பற்குதித்த
மங்கையர்தா நூற்றுவரோர் வாசமலர்ப் - பொங்கரகத்
தாடச் சமீரணன்கண் டாயிழையீ ரெற்குநலங்
கூடிக கொடுதேதிரென்றான் கூர்ந்து. (௩)

எங்கள் பிதாவறிய வெம்மை மணம்புரிந்தா
லங்குனைச்சோ வோமென் றவரியம்பப - பொங்குசினங்
கொண்டு முதுகொடியக் கோதையரை யோதிநனி
மண்டனிலவீழ் வித்தகன்றன் வாயு. (ச)

வாளிகழுங் கண்ணார் மனையடைந்தின் றேற்குறைப்ப
மீளியினைத் தியார்க்குமது விள்ளாது - சூளியென்போன்
பெற்ற பிரமதத்தப் பேர்மகறருப் பேதையரை
நற்றமுறத் தந்தா னயந்து. (ரு)

பின்னர்க் குசநாபன் பேணிப் புரிமகத்தே
நன்னரெழிற் காதியெனு நாமனுறற் - னன்னவற்கு
நவ்விவிழிக் கௌசிகப்பேர் நந்தனிக்குப் பின்னுதித்தான்
றெவ்விருக்குங் கௌசிகனுஞ் சேய். (சு)

தேசிருசி கத்தவனைச் சேர்ந்தவன்வெஞ் சாபத்தாற்
கோசிகைதான் கோமதிப்பே ராறுனுள் - கோசிகனும்
வேந்த னொருஞான்று வேட்டைசெய வோர்விபினஞ்
சேர்ந்துழைபின் னோடித் திரிந்து. (எ)

தானையொடு சோர்ந்து தவஞ்செய் யிடம்புகுத
யானிரங்கி வெம்பசியை யன்னவற்குந் - தேனுவினாற்
றீர்த்தபின்ன ரிச்காம தேனுவைத்தா வெற்கென்று
பார்த்தறைந்தான் வீழ்ந்தென்பதத்து. (அ)

யானுரிய னல்லே னிதற்கெனலுஞ் சேனையொடு
கோனந்தக் கோவை வளைந்துவடத் - தானிமிழ்ப்பா
னேகுதலுஞ் சீறி யிருத்துப் படையனைத்து
நாகமிசை யுறறதவ்வா னன்கு. (கூ)

அங்கரசன் மைந்தரெனை தாவி கொளக்கருதிப்
புங்கமழை போந்து பொழிந்தனர்யான் - வெங்கனலி
சிந்தவிழித் தேநோக்கச் செத்தொழிந்தார் நூற்றுவருஞ்
சிந்தைகொதித் தேந்த றெரிந்து. (கய)

மேலிக் கொடும்படைகள் விட்டனனென் மீதாகண்டு
தாவிலெறுழ்த் தண்டத்தை நாட்டினன்யான-றூவுசர
மாதிச் சுதனமெலா மாங்கதுதா னுங்கிடனு
மேதிவனை வெல்வதியா மென்று. (௧௧)

மீண்டு தனதுபதி விட்டனைத்தங் கீழ்பாலின்
பீண்டுர் தவத்தை யியற்றிடலும் - தூணடசனிச்
செங்கரத்த னேவுந் திலோத்தமையாற் றீர்ந்துதவ
மங்கவனைப் பின்புசபித் தாய்ந்து. (௧௨)

தென்றிசையி னேகிச் சிவன்சே வடிபடர்ந்து
நன்று தவமுனுறற நாதனைனைக் - தன்றவற்கு
வேண்டும் வரமளிப்ப வீறினனந் நாட்பிருது
மாண்ட மதலைதிரி சங்கு. (௧௩)

மெய்யுடனே விண்புகுதல் வேண்டுமெரு ளென்றனும்யா
னையவஃ தொல்லா தெனவறையத் - துய்யவனோ
யெய்துவனென் னேண்ணத்தை யின்னே யடைந்துபிற
செய்தவர்பா லென்றுன் றிரிந்து. (௧௪)

இன்று துரைத்தமையா னீபுலைய ளுகெனயான்
சொன்னேன் புலையனுய்த் துன்பெய்தி - யென்றேடு
மாறுற்று நிற்குமந்த மாதவனைக் கண்டுரைப்ப
வீறும் விமானம் விளித்து. (௧௫)

கள்ளவிழ்தார்க் காவலனே யேறிதன்மே லென்னவிறை
பொள்ளெனவே திப்புகலும் பொன்றுடு - தள்ளினரால்
வானவர்கள் வீழுமவன் மாமுனிவற் கோலமிட
மீனுலகில் வேந்தைவைத்தான் வேர்த்து. (௧௬)

என்றே டெதிர்த்தவ் விருடி யெடுத்தவெலாங்
கொன்னே யழிந்திடலாற் கோசலர்தம்-மன்னிவன்பா
லின்றிழைத்தும் வெவ்விடர்க ளெய்திலனால் வென்றியெனு
மன்றவிசைத் தான்வசிட்டன் மற்று. (௧௭)

மற்றதனைக் கேட்டெழுந்து வாரணவா சிக்கிறைவன்
செற்றபுல வேந்தர் திறமனைத்து - நற்றவநீ
யல்ல தவனிமிசை யாரறிய வல்லரென்றுச்
சொல்லிப் பணிந்தான் றுதித்து. (கஅ)

திங்களுறைந் தாங்குத் திகழ்கா சியரதிபன்
றுங்க வசிட்டற் றொழுதுகொண்டு - மங்குலுற
ழுங்கையரிச் சந்திரனை யன்பிற் றழீஇவிடையூர்
பொங்குபடை யோடணைந்தான் போய. (கக)

வள்ள லயோத்தியிற்பின் மாமடங்க லாசனமேல்
வெள்ளொளிமுத் தின்கவிகை மின்னவமர்ந் - தள்ளிலைவேற்
கையரசர் மந்திரியர் காலிறைஞ்சிப் போற்றமுறை
செய்திருந்தா னின்பந் திளைத்து. (உ0)

## வாழ்த்து.

வேதஞ் சிறக்கமனு நீதி விளங்கவிப்பா
ராதங்க மாறவிசும் பாஞ்சொரிக - வோதுஞ்சொற்
றுமவரிச் சந்திரன்ற னற்சரிதங் கற்குநருந்
தாமமர்க வோங்கித் தழைத்து. (உக)

உத்தரகாண்டம் முற்றிற்று. ஆ. ருஉக.

---

## அரிச்சந்திரவெண்பா முற்றிற்று.



மகாமஹோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
அடையாறு, சென்னை-20.